

# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல கலை, இலக்கியப் பத்திரிகை

SHIVAJI
TAMIL WEEKLY
29th year
of Publication
2—8—1964

அரசியல், தொழில் வள, சமுதாய நல, கலை, இலக்கிய வார இதழ் ♦ ஆசிரியர்: திருலோகசீதாராம்


# இருளில் வழிகாட்ட வேண்டும்

## ஆடம்பரமும் ஆரவாரமும் நீங்கி எளிமையும் அமைதியும் காண்க.

✤

### அஸ்திவாரமில்லாத கட்டிடம்போல் நவபாரதத்தை நிர்மாணிக்கக் கூடாது.

★

### காந்தியடிகளின் வாழ்க்கையையும் அவருடைய லட்சியங்களையும் எண்ணி நாட்டை அவ்வழியில் நடத்துக.

★

தொடர்ந்து தேசீயத் திருவிழாக்கள் நடைபெறுவதன் மூலம் காங்கிரஸ் ஸ்தாபனத்துடன் பொது மக்களின் தொடர்பு அதிகரிக்கும் என்பது உண்மைதான். ஆயினும் விழாக்களில் ஆடம்பரங்களையும் பெரும் செலவையும் தவிர்த்து தொண்டும் உழைப்பும் துல்லியமாகத் தோன்றும்படியான முறையில் விழாக்களைத் திட்டமிட வேண்டிய காலம் வந்துவிட்டது.

காங்கிரஸ் நிறுவனம் இன்று நம்முடைய நாட்டில் ஆளுங் கட்சியாக இருக்கிறது. எனினும் அது அதிகாரம் படைத்ததொரு ஆட்சிப் பீடம் போல் செயல்படுவதைக் காட்டிலும் மக்களின் வாழ்க்கைத் தரத்துடன் இணங்கிச் செயல்படும் எளிமையும் கொண்டதாக இயங்க வேண்டியது அவசியமாகும்.

ஆசிரமம், குடில் என்ற பெயர் வைத்துப் பெரிய பெரிய மாளிகைகளை எழுப்புவது போல, பொது மக்களின் ஸ்தாபனம் படாடோபம் காட்டுவது நிலைக்க முடியாது. இந்த நிலையை மாற்றியமைக்க நமது தலைவர் ஸ்ரீ காமராஜை விட வேறு யாரும் உதவ முடியாது. நடைபெறும் நிகழ்ச்சிகளில் ஆர்வமும் தொண்டும் தோன்றும்படியாகவும் செய்ய உண்மையான தேசபக்தி கொண்ட தொண்டர்கள் முன்வர வேண்டியது அவசியமாகும்.

வரவிருக்கும் சுதந்திரத் திருநாள் ஒரு கோலாகலமான விழாவாக இருக்கலாம். அது நாட்டின் பெருமிதத்தையும் விடுதலை வெற்றியையும் குறிப்பதால் அதை அலங்காரமாகக் கொண்டாடுவது பொருத்தமுடையது தான் அடுத்து வரவிருக்கும் காந்தி ஜெயந்தியைக் கொண்டாடுகின்ற முறையில் புதியதொரு மறுமலர்ச்சி ஏற்படுமாறு முயலவேண்டும்.

காந்தியடிகளின் வாழ்க்கையில் அவர் ஆடம்பரத்தையும் ஆரவாரத்தையும் அங்கீகரித்ததில்லை. சிக்கனத்தையும் சேமிப்பையும் அவர் வற்புறுத்தினார். காந்தி ஜெயந்தியை தேசீய சிக்கன நாளாகவே கொண்டாடலாம். பேட்டைகள் தோறும் நாமாவளிகள் கொண்ட அடக்கமான பஜனை ஊர்வலங்களும், ராட்டைகளில் நூற்பு வேள்விகளும் நடத்தலாம். தேசீயப் பாடல்களை தெருக்களில் வாய்விட்டு ஒருவர் பாட மற்றவர் பின்பற்றிப் பாடுவதன் மூலம் ஒரு உணர்ச்சிச் சூழ்நிலையை உண்டாக்கலாம்.

பேட்டைகள் தோறுமிருந்து புறப்படும் தொண்டர்கள், பஜனைக் கோஷ்டிகள் குறிப்பிட்ட ஓரிடத்தில் சேர்ந்து ஆடம்பரமேயில்லாத முறையில் மாபெரும் ஊர்வலமாகத் திரண்டு சென்னைத் தெருக்களில் பஜனை செய்து கொண்டு கடற்கரையில் பெரிய பொதுக் கூட்டம் நடத்தினால் அதில் உண்டாகும் தூய்மையும் ஆர்வமும் மக்களின் உள்ளத்தில் பெரும் புரட்சியையே உண்டாக்கி விடும். சிக்கனமாகவும் தூய்மையாகவும் வாழ வேண்டுமென்ற பிரசாரம், இதன் மூலம் வலிமை பெறும், பயனும் தரும்.

காந்தியடிகளின் போதனைகள் இன்றைய அரசியல் ஆரவாரத்தில் அமுங்கிப் போய்க் கொண்டிருக்கிறது. தெருக்களை சுத்தம் செய்தால், சேரிகளைத் தூய்மையாக்கல், ஒழுக்கத்தையும் உயர்ந்த நோக்கங்களையும் விவரிக்கும் ஆன்மீகச் சொற்பொழிவுகள் பேட்டைகள் தோறும் நடைபெற வேண்டியது அவசியமாகும். காந்தி ஜெயந்தியை இத்தகைய புதிய — முறைகளில் அல்ல- முன்பு நாம் கடைப்பிடித்து வந்த அடக்கமான அழகிய புனித நெறிகளில் கொண்டாட வேண்டுமென்ற கருத்துடையவர் நமது தலைவர் ஸ்ரீ காமராஜ் அவர்கள்.

காங்கிரஸ் தலைவராக அவர் வந்த சூழ்நிலையும் பண்டித நேரு மறைவுக்குப் பின்னர் அவருடைய தலைமைக்கு நாட்டிலும் உலகிலும் ஏற்பட்டு வருகின்ற நன்மதிப்புக்கும் காரணம், அரசியல் ரீதியானது மட்டுமல்ல. பரம்பரையாக ஒவ்வொரு திருப்பத்திலும் நிலைசாய்ந்து விடாமல் புனிதமான பாதைகளை நமக்குக் காட்டி வரும் காலசக்தியே, மிக நெருக்கடியான இந்த நாளிலும் நமது வாழ்வில் உன்னத லட்சியங்களை மீண்டும் நிலை பெறச் செய்யும் வலிமை படைத்த ஒரு தவப் புதல்வனை நமக்குத் தலைவனாகச் செய்திருக்கிறது. நாடு முழுவதிலும் மக்களின் மனப்பாங்கில் ஒரு திருப்பத்தை உண்டாக்கும் வாய்ப்பும் அவருக்கு இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது.

சந்தர்ப்பச் சூழ்நிலைகளால் பாதிக்கப்படாமல் இமயமலை போல் நிற்கும் வல்லமை படைத்த அந்த மாபெரும் தலைவர்தான் மக்களை ஆரவாரத்திலிருந்து அமைதிக்கும், ஆடம்பரத்திலிருந்து எளிமைக்கும், சுயநலத்திலிருந்து பொது நலத்திற்கும், சாதி மத வேற்றுமைகளிலிருந்து சமதர்மத்திற்கும் திருப்ப முடியும். இவரால் இதைச் சாதிக்க முடியாதென்றால், சமீபகாலத்தில் இதைச் சாதிக்கக் கூடிய துறவி யாரும் இருப்பதாகத் தோன்றவில்லை.

எனவே காலசக்தியின் கண்மணியாக விளங்கும் காமராஜ் தமது ஆட்சிக் காலத்திலேயே மக்களின் உணர்ச்சி வேகங்களை உன்னதமான லட்சியங்களின்பால் திருப்பும் புனித கைங்கர்யத்தில் வழிகாட்ட வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறோம்.

நமது ஜனநாயகம் சிறந்து விளங்குகிறதென்று நாம் பூரித்துப் போக முடியாது.

[5—ம் பக்கம் பார்க்க]

நாட்டின் பாதுகாப்புக்கு
ஆபத்து ஏற்பட்டுள்ளது,
முழு வலிமையுடன் அதைக் காருங்கள்.
—ஜவாஹர்லால் நேரு



**ஆபத்து இன்னும் அகலவில்லை**

எல்லையில் ஏற்பட்டுள்ள அபாயம் இன்னும் அகலவில்லை.
உஷார் நடவடிக்கையை தளர விடாதீர்கள்.
ஒழுக்க முறையாலும், உறுதியாகவும் உழைத்து. பாதுகாப்பை பலப்படுத்துங்கள்.

**உங்கள் முயற்சியை தீவிரமாக்குங்கள்**

## இடம் மாறும்
# மலைக் கோவில்

★

நைல் நதி மீது அஸுவான் அணையைக் கட்டுவதால் எகிப்தின் புராதனமானதும் கலைச் செல்வம் நிரம்பியதுமான அபூ ஸிம்பெல் ஆலயம் தண்ணீரில் மூழ்கிவிடும் பேராபத்தில் உள்ளது. பண்டைக்கால அரசர் ராம்ஸிஸ்ஸும் அரசி நெப்ரேடியும் இந்தக் குகைக் கோயில்களைக் கட்டியிருக்கிருர்கள். இக் கோயில்களை மலையிலிருந்து பிரித்து எடுத்துப் பாகம் பாகமாக வெட்டி அவைகளை உயர்ந்த இடத்திற்குக் கொண்டு சென்று அங்கு முன்பிருந்தது போலவே அமைக்க மேற்கு ஜெர்மன் ஸ்தாபனம் ஒன்று வெளியிட்டுள்ள யோசனை அங்கீகரிக்கப்பட்டுள்ளது. இந்த அபார சோதனை 6 வருடங்களில் நிறைவேற்றப் படும்.

நைல் நதியின் நீரில் அபூ ஸிம்பெல் ஆலயங்கள் மூழ்கிவிடாதபடிப் பாதுகாக்க இப்போது திட்டவட்டமான ஏற்பாடுகள் செய்யப்பட்டு விட்டன. நூபியன் பாலைவனத்தில் இதற்கான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. எஸ்ஸென்னைச் சேர்ந்த ‘‘ஹோரிச்டிப் ஏஜி’’ என்ற கம்பெனி இதர ஐரோப்பியக் கம்பெனிகளின் ஒத்துழைப்புடன் அஸுவான் அணையைக் கட்டி நைல் நதிநீரை வேறு பக்கம் திருப்பும் முயற்சியை மேற்கொண்டுள்ளது.

புதிய அஸுவான் அணைத் தேக்கத்தைக் கட்ட சில விலை மதிக்க முடியாத சிற்பச் செல்வங்கள் நைல் நதி நீரில் மூழ்கி விடும் என்பதை ஏற்கனவே எகிப்திய, சூடான் அரசாங்கங்கள் எடுத்துக்காட்டி அவைகளைப் பாதுகாக்கும் வேலை பற்றி தீர்மானமான பின்னரே அணைத்தேக்க வேலைகளை மேற்கொள்ள வேண்டும் என்று வற்புறுத்தி வந்தன.

இத்தகைய ஆபத்து சுமார் 25 ஆலயங்களுக்கு ஏற்பட்டுள்ளன. இவைகளில் இரண்டு, இரண்டாவது ரம்ஸீஸ் மன்னரால் கி. மு. 1250-இல் கட்டப்பட்டதாகும். பழைமையானது என்பதுடன் மட்டுமின்றி கலை அம்சத்திலும் இவை மிகவும் புகழ்பெற்றவை. மற்ற ஆலயங்களைப் போல் இவை தனிப்பட்ட பாறைகளைக் கொண்டு கட்டப்படவில்லை. மலைச் சரிவில் குடையப்பட்டு அமைக்கப்பட்ட குகைக் கோயில்களாகும். இவைகளைத் தண்ணீரில் மூழ்காமல் பாதுகாக்கப் பல யோசனைகள் கூறப்பட்டதில் நான்கு யோசனைகள் மட்டும் முடிவான பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டன. இந்த ஆலயங்களை அப்படியே அலாக்காகத் தூக்கி காங்கிரீட் அஸ்திவாரத்தின் மீது அமைப்பது என்பது ஒரு யோசனை. ஆனல் இதற்காகும் செலவு மிக மிக அதிகமானது என்ற காரணத்திஞல் இந்த யோசனை கைவிடப்பட்டது.

கோயிலைச் சுற்றி தண்ணீர் புகாமலிருக்க அணைகளைக் கட்டுவது என்பது இதர யோசனைகளாகும். இவை நிறைவேற்றப்பட்டால் இந்த ஆலயங்கள் 60 மீட்டர் ஆழத்திற்குப் போய்விடும். ஆகவே இந்த யோசனைகளும் கை விடப்பட்டன.

நூபியா பகுதியில் மிகப் பெரிய ஆலயமான கலாப்ஷா ஆலயத்தை ஒரு இடத்திலிருந்து மற்ருெரு இடத்திற்கு மாற்றுவதில் எஸ்ஸென்னைச் சேர்ந்த ‘‘ஹோச்டிப் ஏஜி’’ கம்பெனி சென்ற இரண்டு வருடங்களாக வேலை செய்து வெற்றி பெற்றுள்ளது. மலையிலிருந்து இந்த ஆலயத்தை வெட்டி எடுத்து தனித்தனிப் பாறைகளாக்கி 68 மீட்டர் உயரமுள்ள இடத்தில் மீண்டும் முன்பிருந்தபடியே அமைத்து விடுவது என்பதுதான் இந்த கம்பெனி வெளியிட்ட யோசனை. இந்த யோசனைக்கு அங்கீகாரம் கிடைத்துள்ளது.

இந்த மாபெரும் இடமாற்ற வேலையைச் செய்து முடிக்க ஆறு வருடங்கள் பிடிக்கும். இது மூன்று கட்டங்களாக நிறைவேற்றப்படும். முதலில் இந்த ஆலயம் இருக்கும் இடத்தில் தண்ணீர் வராமல் இருக்க ஒரு அணை கட்டப்படும். இதே சமயத்தில் ஆலயத்தில் சுவர் உத்தரம் இவைகளை வெட்டுவதற்கு வசதியாக அவை தயார் செய்யப்படும். இது முதல் கட்டம்.

பின்னர் 13 மீட்டர் உயரத்திற்கு தண்ணீர் மட்டம் உயரச் செய்து இரண்டாவது கட்டம் மேற்கொள்ளப்படும். இப்போது 25 டன் எடைகொண்ட பாறைகளாக ஆலயம் பிரிக்கப்படும். 1,200 டன் எடையுள்ள ராம்ஸிஸ் சிலையும் இம்மாதிரியே துண்டாக்கப்படும். அணைமீது அமைக்கப்பட்ட புதுச்சாலை வழியாக இந்த பாகங்கள் 180 மீட்டருக்கு அப்பாலுள்ள உயர்ந்த இடத்திற்குக் கொண்டு செல்லப்படும்.

1965-இல் அணை நிரம்பி விடும். அதற்குள் ஆலயப் பகுதிகளை துண்டாக்கி அகற்றும் வேலை முடிவடைந்து விடும். பல துண்டுகளாக்கப்பட்ட பாகங்கள் ஒன்ருக இணைக்கப்படுவது தான் மூன்ருவது கட்ட வேலையாகும். இவ்வேலை முடிந்ததும் ஆலயம் முன்பு இருந்ததுபோலவே நைல் நதிக்கரையில் தோற்றமளிக்கும்.

இதில் மற்ருெரு விசேஷம் என்னவென்ருல் ஒரு குறிப்பிட்ட தினத்தில் உதய சூரிய கிரணங்கள் ஆலயத்திற்குள் குறிப்பிட்ட இடத்தில் முன்பு விழுந்து வந்ததுபோலவே புது இடத்திலும் அமைக்கப்பட்டக் கோயிலில் உதய சூரிய கிரணங்கள் அதே குறிப்பிட்ட தினத்தில் விழும். எகிப்தின் புராதனப் பெருமையைப் பாதுகாப்பதில் மேற்கு ஜெர்மனி பெரும் பங்கை ஏற்கவிருக்கிறது.

★



*அறிவிப்பு-1.*

## மேட்டூர் தண்ணீர்

மேட்டூர் நீர்த் தேக்கத்தில் நீர் மட்டமும், நீர் தேக்கமும் குறைவாக இருப்பதாலும் நீர்த் தேக்கத்திற்கு நீர் வடி பரப்பிலிருந்து தண்ணீர் வரத்தும் குறைவாக இருப்பதாலும் திருச்சி ஜில்லாவில் புதுக் கட்டளை மேல் மட்ட வாய்க்காலிலும் புள்ளம்பாடிவாய்க்காலிலும் வழக்கம் போல் ஆகஸ்டு முதல் தேதி முதல் பாசனத்திற்கு தண்ணீர் விடுவதற்கில்லை. ஆகையால் சர்க்காரால் இந்த இரண்டு வாய்க்கால்களிலும் பாசனத்திற்கு தண்ணீர் விட உத்திரவு பிறப்பிக்கும் வரையிலும் ரயத்துக்கள் தங்களது நாற்றங்கால்களை செய் நேர்த்தி செய்யவும் நாற்று விடவும் வேண்டாம் என கேட்டுக்கொள்ளப்படுகிருர்கள். *

# காமராஜ் வாழ்த்து

மலர்ந்து வரும் புதியதொரு சமுதாயத்தின்
வாழ்விலினி மக்கள் நிகர் என்னுங்கொள்கை
விலகாத நெஞ்சுடையீர் வேற்ருர் ஆண்ட
வினைப்பயஞல் பாழ்பட்ட பரதநாட்டில்
சலியாத நற்பணியால் சன்மார்க்கத்தால்
சாதிப் போம் புதுமையென வரிந்து கட்டி
உலவாத சமதர்மப்பாணி யோங்க
உழைக்கின்ற உத்தமர்காள் வணக்கம் சொன்னேன்

பேதமிட்டு வாதிட்டுக் கலகமிட்டுப்
பெரும்பகையால் போரிட்டுப் புகைந்து போகும்
நீதமிலாப் புன்னெறியே வீரமென்னும்
நெடுங்கால வரலாற்றைத் தலைகீழாக்கிக்
கோதகன்ற உள்ளத்தால் குமிண்சிரிப்பாற்
குவலயத்தை ஆண்டு கொண்ட கொள்கைதன்னை
மாதவத்தை மானிடஞங் காந்தி யென்னும்
மாபெரிய தத்துவத்தை வகுத்தாய் நெஞ்சே

புதுவாழ்வின் புலரியிலே பொறுப்பை யேற்றுப்
பொழுதெல்லாம் ஓய்வின்றி உழைத்துழைத்து
அதிகாரம் செலுத்தாமல் அன்பால் ஆண்டு
அனைத்துலகும் தொழுதேத்த அமரன் ஆஞன்
விதிச்செயலால் வினைமூள நமைப்பிரிந்த
வித்தகனை விண்சென்ற வீரன் தன்னைக்
கதிரொளியாய்க் காசினியில் திகழ்ந்தான் தன்னைக்
கருத்தினிலே என்ஞளும் கருதாய் நெஞ்சே

காலன்யமன் கனவதனைக் கணக்குப் போட்டுக்
கவனத்தில் வைத்திருந்தார் போலும் நேரு
வியப்பினிலே வையகமே மூழ்கிப் போக
விட்டகுறை தொட்டெடுத்து முடிக்க வல்ல
நயமறிந்த நல்லானை நாடித் தேர்ந்து
நாயகஞய் முடிசூட்டி வைத்துப் போஞன்
பயமறியான் பணிவறியான் பதட்டமில்லான்
தாயாஞன் பாரதர்க்குத் தமிழன் தன்னை

உலகத்திற் கோர்புதுமை உண்மை இந்த
ஒப்பில்லாச் சமுதாயம் என்றே அந்நாள்
புலவர் பிரான் பாரதியார் புகழ்ந்து சொன்ன
புதியயுகம் பூத்துவரும் வேளை இன்று
சலசலப் பெல்லாமடங்கிச் சன்மார்க்கத்திற்
சமதர்மக் குறிப்பினிலே ஒன்றுபட்டுக்
குலவி மகிழ் கின்றதொரு கொள்கைக் கென்றே
கொடி யேந்தி முன்னடக்கும்வீரன் எங்கள்

அருந்தலைவன் ஆணைவழி நடப்போம் அன்ஞன்
அடிவைத்தான் அறுபத்தி ரண்டாம் ஆண்டில்
உரிமையெல்லாம் மக்களுக்கே என்று சொல்லும்
உண்மைசன நாயகமாம் ஊற்றம் கண்டீர்
திருவெல்லாம் மக்களுக்குப் பங்கீடென்று
தேர்வதுவே சமதர்மம் ஆதல் கண்டீர்
கருத்திதனைக் கருதுதற்கும் காரியத்தில
கணக்காக முடிப்பதற்கும் என்றே இந்த

வாரவிழா எடுக்கின்ருேம், வடக்கேசென்று
வான்சென்ற அண்ணலுக்குக் கடன்முடித்து
நேர்மேற்கே பாஞ்சாலக் கூன் நிமிர்த்தி
நெடுங்காளி கட்டத்தில் உலாவும் போந்து
கார்கொண்ட குற்ருலத் தருவியாடி
காமராஜ் குளிர்மனத் தோடிங்குவந்தார்
யார் கொண்டார் இப்பேறு, கொண்டார்செல்லும்
அறவழியில் ஆணைவழி நடப்போம்வாரீர் !

— திருலோகசீதாராம்

# ஏழைகளின் பாதுகாவலன்...

— கருப்பையா, பி. ஏ.,

காங்கிரசின் வேர்கள் இந்திய மண்ணில் ஆழமாகப் பரவியிருக்கின்றன. இந்தியாவில் வாழும் கோடானு கோடி ஏழை மக்களை — எளிய நடுத்தர மக்களை — பிரதிபலிக்கும் ஒரே ஒரு இயக்கம் காங்கிரஸ்தான்.

சுதந்திரத்திற்கு முன்பு குறுநில மன்னர்களும், சமஸ்தான அதிபதிகளும், நிலப்பிரபுக்களும், பெரும் பணக்காரர்களும் மட்டும் அனுபவித்து வந்த சலுகைகளையும் நன்மைகளையும் சுதந்திரத்திற்குப் பிறகு சாமானிய மக்கள் அனுபவிக்கும்படி காங்கிரசாட்சி செய்து விட்டது.

காங்கிரசிடத்தில் அங்கொன்றும், இங்கொன்றுமாகச் சில குறைகளைச் சுட்டிக் காட்டக்கூடும். ஆனால், அது நிகழ்த்தியுள்ள புரட்சிகரமான செயல்களை மனச்சாட்சியுள்ள எவரும் மறுக்க வியலாது.

சுதந்திரத்திற்கு முன்பு இருந்த நிலைமை யென்ன?

முதலாளிகளின் வீட்டுப் பிள்ளை பள்ளிக்கூடம் சென்று படிப்பான். ஏழையின் பிள்ளை, கோவணங்கூடக் கட்டாமல் தெருவிலே அலைந்து கொண்டிருப்பான்.

முதலாளி மகன் டில்லிக்குப் போவான் – இலண்டன் செல்வான் — அமெரிக்காவிடமிருந்து அவனுக்கு அழைப்பு வரும்.

– தொழிலாளி மகன் ஓட்டலிலே பிளேட் கழுவப் போவான் — ஆடுமாடு மேய்க்கச் செல்வான் — எட்டணா, நாலணா கூலிக்காகக் கழுத்து ஒடியும் பளுவைத் தூக்கிக்கொண்டு சென்ட்ரல் ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் அலைந்து கொண்டிருப்பான்!

இன்று அந்த நிலைமை கிடையாது. ஏழை – எளிய மகனுக்கு இலவசக் கல்வி. பணக்காரவீட்டுக் குழந்தையைப்போல இவனும் படிக்கிறான். கிராமத்துக்குச் சென்று பாருங்கள் — பண்ணையார் வீட்டுக் குழந்தைகளோடு ஒரே பலகையில் உட்கார்ந்து படிக்கிறார்கள், பண்ணையாரிடம் வேலை செய்வோரின் பிள்ளைகளும்!

சம்பளம் கட்ட முடியாதே என்ற கவலை இல்லை. சம்பளம் கட்டத் தேவையில்லை என்று அறிவித்திருக்கிறது காங்கிரசாட்சி. அது மட்டுமா? பகலில் இலவச உணவு, அத்துடன் சீருடைத் திட்டம்!

இந்தப் புரட்சிகரமான சாதனைகளின் காரணமாக தொழிலாளி மகன் தொண்டமான் ஆகிறான். கருமான் மகன் கலெக்டர் ஆகிறான். படையாச்சி மகன் படைத்தளபதி ஆகிறான். மட்டமான வகுப்பு என்று ஒரு காலத்தில் ஒதுக்கப்பட்டவனின் மகன் மந்திரியாகிறான்!

நம் கண் முன்னாலே காணும் உண்மை, இது.

கல்வியை, மாளிகை வாசிகளிடமிருந்து மக்களிடையே கொணர்ந்து பொதுவுடமையாக்கியது காங்கிரசாட்சி.

சுதந்திரம் வருவதற்கு முன்பு, கல்வி மட்டுமல்ல, தொழில் துறையின் ஏகபோக ஆதிக்கமும் ஒரு சிலரிடம் முடங்கிக் கிடந்தது. பெரும் பணக்காரர்மட்டுமே தொழில் நடத்தலாம், ஏழை தொழில் திறமையுடையவராக இருந்தாலும் தொழில் நடத்த முடியாது என்ற நிலை இருந்தது.

சிறு வியாபாரிகள் தேவையான போது கடன் பெற வசதிகள் கிடையாது. பெரு முதலாளிகள் தாங்கள் வைத்ததே சட்டம் என்ற நிலையில் நடத்திய தர்பாரைத் தட்டிக்கேட்க ஆட்கள் இல்லை — கட்டுப்பாடுகள் ஏதும் இல்லை. ஆளும் வர்க்கமே அவர்களுக்கு அனுசரணையாகத்தான் இருந்தது.

சுதந்திரத்திற்குப் பிறகு அந்தத் தர்பாரும், திமிரும் தகர்க்கப்பட்டன.

நீங்கள் தொழில் திறமையுடையவரா, அது போதும் உங்களிடத்தில் பணம் இல்லாவிட்டால் பரவாயில்லை. இயந்திர வசதிகள் இல்லையே என்ற ஏக்கம் தேவையில்லை.

உங்களுக்கு வசதிகளைச் செய்து கொடுக்க காங்கிரசாட்சி முன் வந்திருக்கிறது. உங்களுக்காகத்தான் தொழில் பண்ணைகளும், தொழில் பேட்டைகளும் அரசாங்கம் கட்டிக் கொடுக்கிறது. இயந்திரங்களை முன் பணம் போட்டு வாங்கித் தருகிறது. நீங்கள் சொந்தமாகத் தொழில் நடத்தலாம். மற்றவர்களிடம் சென்று வேலைக்கமர்த்து உங்கள் திறமையைப் பயன்படுத்தி அவர்கள் இலாபமடையுமாறு விட வேண்டாம் — கூலிக்கு மாரடிக்கத் தேவையில்லை.

காங்கிரசாட்சி தொழில் துறையில் ஏகபோக முறைக்குச் சாவுமணி அடிக்கத் தொடங்கி விட்டது.

முதலாளி என்ற சொல்லுக்குச் சுதந்திரம் வருவதற்கு முன்பு பொருள் வேறு! இன்றைய பொருளே வேறு!

இலட்சக் கணக்கில் முதல் போட உங்களால் முடியாதா? நூல் ஆலைகளை — சிமெண்ட் தொழிற்சாலைகளை – உங்களால் அமைக்க இயல வில்லையா? முகத்தைத் தொங்கப் போட்டுக் கொள்ள வேண்டாம். உங்களைப்போன்ற சிலர் ஒன்று சேர்ந்தால் போதும். நீங்கள் அனைவரும் சமானிய மானவராக இருந்தாலும் பாதகமில்லை. கூட்டுறவு முறையில் பிரம்மாண்டமான ஆலைகளைத் துவக்கி நடத்தலாம். தமிழகத்தில் அவ்வாறு பல ஆலைகள் தொடங்கி நடைபெற்று வருகின்றன.

காங்கிரசாட்சியின் இந்தப் புரட்சிகரமான முயற்சிகள் தொழில் துறையில் ஒரு புதிய அத்தியாயத்தைத் துவக்கியிருக்கின்றன.

பெரு முதலாளிகளுக்கான வரி விதிப்புகளை எண்ணினால் நமக்கே பிரமிப்பு ஏற்படும். “ஒரு இலட்சம் லாபமா, எண்பத்தியெட்டாயிரம் வரியாகத்தா” என்கிறது காங்கிரசாட்சி!

உலகத்தில் எந்த நாடுகளிலும் இல்லாத அளவு கடுமையாகச் சில வரிகள் இங்கே விதிக்கப்பட்டுள்ளன.

சொத்து வரி, வருமான வரி, இலாபத்தின்மீது வரி, செலவு வரி, இறந்துபோனாலும் வரி என்று பல வரிகளின் மூலம் பணக்கார வர்க்கத்தினிடம் ஏற்பட்டுள்ள பொருளாதார மேடு உடைக்கப்படுகிறது.

சுதந்திரத்திற்கு முன்பு உழவுத்தொழிலில் ஈடுபட்டவர்கள் அனுபவித்து வந்த கொடுமைகளை வாயினால் சொல்ல வியலாது. ஒரு புறம் உழைப்பு என்பதையே அறியாத ஜமீன்தார்கள் லீலா விநோதங்களிலும் கேளிக்கைக் கூத்துக்களிலும் ஈடுபட்டிருப்பர். நெற்றி வியர்வை நிலத்திலே சிந்தப் பாடுபட்டு உழைத்திடும் விவசாயப் பெருமக்கள் மற்றொரு புறம் வாழ்நாட்களைக் கழித்திடுவார்கள்.

இந்தியாவின் முதுகெலும்பு விவசாயம். சுதந்திரத்திற்கு முன்பு அதனுடைய நிலை என்னவாக இருந்தது தெரியுமா?

உழைத்து உருக்குலைந்து ஓடாய்த் தேய்ந்தான் விவசாயி. உல்லாச வாழ்வு நடத்தினர்கள், நிலப்பிரபுக்களும், ஜமீந்தார்களும்.

உழைப்பவனுக்குக் குடிசைக்கூட இருந்ததில்லை. ஜமீன்தாருக்கோ, ஊருக்கொரு பங்களா — கிராமத்தில் எல்லா நவீன! வசதிகளுடன் ஒன்று, சென்னையிலே ஒன்று, போதாக் குறைக்கு ஊட்டி, கோடைக் கானலிலே இரண்டொன்று இவ்வாறு கூறுவது மிகச் சிக்கனமான கணக்கு!

உழவனுக்கு நிரந்தரமான வேலை வாய்ப்பு இருக்காது. நிலக்கிழாரின் பெயரைச் சொன்னதுமே அவன் தன் தலையில் கட்டிய முண்டாசை அவிழ்த்துக் கையிலே இடுக்கிக் கொண்டு பவ்யமாக நிற்பான்.

‘டேய் கழுதை’ என்பார் நிலப்பிரபு. பொறுத்துக் கொள்ளுவான் இந்தப் பேதை. அதுமட்டுமா? நிலக்கிழார் வீட்டு நாலு வயதுப்பிள்ளையும் இவனை மதிக்காது. ‘டேய் முனியா’ என்றுதான் அதுவும் அதட்டும். இவன் ஓடோடிச் ‘‘என்னங்க சின்ன முதலாளி?’’ என்று குழைவான். முனியனுக்குத் தலையெல்லாம் நரைத்திருக்கும். சின்ன முதலாளியின் வயதைத்தான் ஏற்கெனவே குறிப்பிட்டேனே!

சிறிதளவு நிலத்தைச் சொந்தமாக வைத்திருந்தவன் பாடும் திண்டாட்டம் தான். மாடு இருக்காது. மாட்டிற்குத் தீவனம் வைக்கச் சக்தி இருக்காது. விதை நெல் வாங்கிடக் கூட சில சமயங்களில் பணமிருக்காது.

சிறு விவசாயி ஓடுவார் பெரிய பண்ணையார் வீட்டிற்கு. தனது நிலத்தை அநியாய வட்டிக்கு அடகு வைத்து விட்டு நூறோ ஐம்பதோ வாங்கி வருவார். அதற்கே அவர் படும்பாடு சொல்லத்தரமன்று. பண்ணையார் இலேசில் காசு தரமாட்டார்.

கடன் கேட்க வந்திருப்பவரின் நிலம் மூவாயிரம் பெறுமா, நாலாயிரம் தாளுமா, என்றெல்லாம் கணக்குப் போட்டுப்பார்த்து தமக்குள் திருப்தி ஏற்பட்டதும், ‘‘ஏதோ நீ நல்லவன், கடவுள் பக்தி உள்ளவன் என்பதால் உனக்காகத் தருகிறேன், கந்தசாமி! பணத்தை வட்டியோடு ஒழுங்காகக் கொண்டுவந்து காலாகாலத்தில் கட்டிவிடு’’ என்று கூறுவார். வட்டி என்ற சொல்லைச் சற்று அழுத்தத் திருத்தமாகவே உச்சரிப்பார்.

பிறகு நடக்கக் கூடிய கதை உங்களுக்கு அநேகமாகத் தெரிந்ததுதானே! விவசாயி கந்தசாமி வாங்கின கடனைத் திருப்பித்தர முடியாமல் தவிப்பார். வட்டி ஏறிக்கொண்டே போகும். திடீரென்று ஒரு நாள் பண்ணையாரின் ஆட்கள் கந்தசாமியின் நிலத்திலே இறங்குவார்கள். ‘என்னய்யா?’ என்று வயிறெரிந்து கேட்பார் கந்தசாமி. ‘‘நீ வாங்கின கடனுக்கும், வட்டிக்கும் சேர்த்து நிலத்தை எடுத்துக்கொண்டு விட்டார் பண்ணையார்’’ என்ற பதில் வரும். கந்தசாமி கதிகலங்கி நிற்பார்.

கடன் வாங்கிப் பயிர் செய்தாலும் விளைச்சலை நல்ல விலைக்கு விற்க விவசாயியால் முடியாது. மார்க்கெட் வசதிகள் கிடையாது. விவசாயிக்கோ உடனடியாகப் பணம் வேண்டும். ஆகவே, கிடைத்த மட்டும் இலாபம் என்று கருதி களத்து மேட்டிலேயே நெல்லை விலை பேசி விடுவார்.

இவ்வாறு இந்திய விவசாயி துன்பக்கடலில் சிக்கி மூழ்கிக் கொண்டிருந்த போதுதான் காங்கிரசாட்சி கலங்கரை விளக்கமாக அவருக்குக் கிடைத்தது.

நிலைமை புரட்சிகரமாக மாறிற்று.

ஜமீன்கள் ஒழிக்கப்பட்டன; இனாம்தாரர்கள் அழிக்கப்பட்டனர். விவசாயிகளின் நிலைமையில் அபிவிருத்தி காணப் பல சட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. விவசாயியை மிரட்டுகின்ற நிலைமை மாறியது. நினைத்த போது நிலங்களிலிருந்து வெளியேற்றுவேன் என்று முன்பெல்லாம் பயமுறுத்திக் கொண்டிருந்த நிலப்

(6-ம் பக்கம் பார்க்க)



ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

இதழ் 28 | 2—8—1964 | வாரம் 37

# அகதிஸ்தான்

★

பாரதம் பாகிஸ்தான் என்று நமது நாடு இரண்டாகப் பிரிந்த பிறகு அகதிகளின் எண்ணிக்கை அதிகரித்து வரும் வேகத்தைப் பார்த்தால், அகதிஸ்தான் ஒன்றை அமைக்கக்கூடிய, அல்லது அமைக்கவேண்டிய அளவுக்கு நிலைமை பயங்கரமாக இருக்கிறது.

பர்மிய சர்க்கார் சோஷலிஸக் கொள்கையின் பெயரால் அங்குள்ள இந்தியர்களைத் திருப்பி இங்கு அனுப்பி வருகின்றனர். அவர்களுடைய சோகக் கதைகளைக் கேட்கும் பொழுது நமது நெஞ்சம் பதறுகிறது. இலங்கையில் உள்ள இந்திய மக்களில் தமிழ் மக்களின் தொகை எப்படி மிகுதியும் உள்ளதோ அப்படித்தான் பர்மா அகதிகளிலும் நம்மவர்களே கணிசமாக இருப்பார்கள். இலங்கையிலும் பர்மாவிலும் நமது மக்கள் உழைத்து அவற்றை வசிக்கக் கூடிய நாடுகளாக உருமாற்றினர்கள். விவசாயம், தொழில், கல்வி, கலை, சமயம், இலக்கியம் ஆகிய ஒவ்வொரு துறையிலும் இவ்விரண்டு நாடுகளிலும் பாரத மக்கள் ஈடுபடுத்தியுள்ள உழைப்பனைத்தும் விழலுக்கு இறைத்த நீராகி விட்டன.

அகில உலகம், ஐ. நா. சபை, காமன் வெல்த், சர்வோதயம், என்று நம்மைக் கவர்கின்ற எத்தனையோ பரந்த கொள்கைகளின் அடிப்படையில் உள்ள ஒவ்வொன்றும் கடைசியில் பேச்சளவுதானே என்று தோன்றுகிறது. சீனக்காரன் வடக்கே ஊடுருவிக்கொண்டிருக்கும் நிலையிலும் கூட அவனுக்கு ஐ. நா.வில் அந்தஸ்து கொடுக்கப்பட வேண்டுமென்று நாம் வாதாடத் தயங்கவில்லை.

என்ன கரடியாய்க் கத்தினாலும் அந்தரங்க சுத்தியுடன் நாம் நடந்துகொண்டாலும் வெறும் வாய்ப்பேச்சில் பாராட்டுப் பெறும் அளவில்தான் இருக்கிறதே தவிர அவரவர் சொந்த நலனைத்தான் உலக நாடுகள் பார்த்துக் கொண்டு போகின்றன. கிழக்குப் பாகிஸ்தானிலிருந்து வந்து கொண்டேயிருக்கும் அகதிகளின் எண்ணிக்கை 4 லட்சத்தைத் தாண்டி விட்டதாகப் பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன. இந்த நிலையில் பர்மாவிலிருந்து தாய் நாட்டுக்கும் புகல் தேடி வரும் பாரதப் புதல்வர்களின் சோகக் கண்ணீரைத் துடைத்தாக வேண்டும்.

பர்மா அகதிகளில் தென்னாட்டு மக்கள் தாம் அதிகம். விவசாயமும் வாணிபமும் கொடுக்கல் வாங்கலும் செய்து வந்த நகரத்தாரை முன்னமேயே ஒட்ட உறிஞ்சிக் கொண்டு அனுப்பிவிட்டது பர்மா. பல நூற்றாண்டுகள், வணிகமும், நல்லறமும், திருப்பணிகளும், கலை வளர்ச்சியும் காண உதவிய தென்னாட்டுத் தன வணிகர்கள் பர்மாவின் அகதிகள்தாம். இவர்கள் தங்கள் புனர் வாழ்வுக்குச் சென்ற 18 ஆண்டுகளுக்கு மேலாக எவ்வளவு சிரமப்பட்டுக் கொண்டிருக்கிறர்கள் என்பதை, அவர்கள் வீட்டு நிலை வாசல்களும், ஜன்னல்களும், பாத்திரங்களும் கடைத்தெருவுக்குத் தட்டுத் தூக்குகிறவனுடைய தலைக்கு வந்து விட்டதிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

உலகில் தலைசிறந்த அந்தஸ்துடைய பாரதத்தின் மக்கள் பூண்டோடு பர்மாவிலிருந்து அகற்றப்படுகிருர்கள். இதைப் பார்த்துக் கொண்டு அரசியல் தத்துவார்த்தச் சிறப்புகளைப் பற்றிப் பேசியும் தர்க்கித்துக் கொண்டும் இருந்துவிட்டால் பரிகாரம் கிடைத்துவிடாது.

நமது முதலமைச்சர் பர்மா அகதிகளைப்பற்றி மிகவும் கவலை தெரிவித்திருக்கிருர். வருகிறவர்களுக்கு வாழ்வளிக்க வேண்டும். வேற்று நாடுகளில் நமது மக்களுக்கு மரியாதை கிடைக்க வேண்டும். இரண்டையும் மத்திய அரசாங்கம் சரியாகக் கவனிக்க வேண்டுகிறேம்.

★

# கண்ணோட்டம்

— ரா. நா.

இந்த ஆண்டு நவம்பர் மாதம் நடக்கவிருக்கும் அமெரிக்க ஜனாதிபதி தேர்தலுக்கு குடியரசுக் கட்சியின் சார்பில் பாரிகோல்டு வாட்டர் என்பவர் அபேட்சகராக நியமனம் செய்யப்பட்டிருக்கிருர். கவர்னர் ராக்பெல்லர் என்பவர், கவர்னர் ஸ்கிராண்டன் என்பவரும் இவருடன் போட்டி போட்டு தோல்வியுற்றனர்.

கோல்டுவாட்டர் பிற்போக்காளர். தற்போது ஆட்சியிலுள்ள ஜனநாயகக் கட்சியுடன் பெரும்பான்மையான விஷயங்களில் மாறுபட்ட கருத்துள்ளவர். சமீபத்தில் நீக்ரோக்களுக்கும் வெள்ளையர்களுக்கும் சமமாக பிரஜா உரிமை அளித்து நிறைவேற்றப்பட்ட சட்டத்திற்கு எதிரிடையாக இவர் ஓட்டளித்தார்.

அணு ஆயுத சோதனையை நிறுத்த வேண்டும் என்று ஏற்பட்ட நிர்ப்பந்தத்தை இவர் எதிர்க்கிருர். கம்யூனிஸ்ட் ஆட்சிகள் பலம் பெருமல் எதிர்க்க வேண்டும் என இவர் வாதாடுகிருர். இவர் ஜெயித்தால் உலக சமாதானத்திற்கே ஆபத்து வரும் என அறிஞர்கள் கருதுகின்றனர். இவர் ஜெயிப்பதற்கு வாய்ப்பில்லை என இவரது கட்சியைச் சேர்ந்த அறிஞர்களே கருதுகின்றனர்.

டேவிட் ஸ்கல் எனும் குடியரசுக்கட்சி பிரமுகர் "நாட்டில் கால்பங்கு பேர் தான் குடியரசு கட்சியினர். இதில் மூன்றில் ஒரு பங்கினர் தான கோல்டுவாடரை ஆதரிக்கின்றனர். நாட்டில் 8 சதம் பேர் தான் இவரை ஆதரிப்பார்கள்" எனக் கூறுகிருர். தென் கிழக்கு ஆசியாவில் அமெரிக்க தூதராகப் பணியாற்றும் ஹென்றி காபட்லாட்ஜ் என்பவர் 'தற்சமயம் குடியரசுக் கட்சியைக் கைப்பற்றியுள்ளவர்கள் தற்கால உலகை அறியாதவர்கள்' என்று மதிப்பிடுகிருர். முன்னுள் ஜனாதிபதி ஐஸன் ஹோவர் கூட கோல்டு வாட்டரைப் பற்றி உற்சாகமாக இல்லை.

ஜனநாயகக் கட்சியின் அபேட்சகராக தற்போதைய ஜனாதிபதி லிண்டன் ஜான்ஸன் தான் அபேட்சகராகத் தேர்ந்தெடுக்கப்படுவார். கென்னடி மறைவுக்குப் பிறகு அவர் ஆட்சியை நடத்தி வரும் முறையும், வறுமையைப் போக்க அவர் பட்டுவரும் பாடும், கம்யூனிஸ்ட் நாடுகளுடன் நட்புறவு கொண்டு உலகப் போர் நிகழாமல் தடுத்து வரும் பாங்கும், நீக்ரோக்கள் உரிமை விஷயத்தில் அவர் காட்டி வரும் அக்கறையும் அவர்தான் வெற்றி பெறுவார் என்கிற நம்பிக்கை யூட்டுகிறது.

கோல்டு வாட்டரின் தாத்தா போலண்டிலிருந்து 1852-ல் அமெரிக்காவில் குடியேறிய யூதர், அவர் முதலில் ஒரு ஸலூன் நடத்தினர். பின்னர் ஒரு சில்லரை விற்பனைக் கடை நடத்தினர், இது கலிபோர்னியாவில். பின்னர் தற்போது கோல்டு வாட்டர் வசிக்கும் அரிஸோனுவுக்குச் சென்று, அங்கு சுரங்கத் தொழிலாளிகளுக்குத் தேவையானவைகளை தலையில் தூக்கிச் சென்று விற்று வந்தார்.

கடைசியாக ஒரு துணிக் கடை தொடங்கினர். கோல்டு வாட்டரின் தாய் 89 வயதானவர் இன்றும் உயிருடன் இருக்கிருர். 1909ல் கோல்டு வாட்டர் பிறந்தார். அவர் மத குருவாக வரவேண்டும் என தாய் ஆசைப்பட்டாள். பள்ளிப்படிப்பில் அவ்வளவாக அவருக்கு ஆர்வமில்லை பள்ளியை விட்டு தந்தைக்குத் துணிக்கடையில் உதவி புரிய முன் வந்தார். இரண்டாவது உலகப் போரில் விமானம் ஓட்டியாகப் பணியாற்றினர். அதில் மேஜர் ஜெனரல் பதவியை அடைந்தார்.

1949-ல் பினிக்ஸ் நகர சபை உறுப்பினராயிருக்கையில் அங்குள்ள ஒரு ஹோட்டலை நீக்ரோக்களும் பயன்படுத்த உதவி செய்தார். 1952-ல் அமெரிக்க செனட் சபை உறுப்பினரானர்.

ஐஸன் ஹோட்டலை நீக்ரோக்களும் பயன்படுத்த உதவி செய்தார். 1952-ல் அமெரிக்க செனட் சபை உறுப்பினரானர். ஐஸன் ஹோவரின் ஆட்சிக் காலத்தில் இவர் அரசாங்கத்தின் அவருடைய வரவு செலவு திட்டங்களை வன்மையாகக் கண்டித்துப் பேசினர்.

ஜனநாயகக் கட்சி வலுவடையாது இருப்பதனுலும், கென்னடி ஜான்ஸன் ஆட்சி உலகத்தை தங்கள் சாதனைகள் மூலம் கவர்ந்துள்ளதாலும், குடியரசு கட்சியிலேயே கணிசமான பிரமுகர்கள் கோல்டுவாட்டருடைய கட்சியில் ஆர்வமற்றிருப்பதனுலும் அவர் நவம்பர் தேர்தலில் வெற்றியடைய முடியாது என்றே தோன்றுகிறது.

⁂ ⁂

தி. மு. க. வுடன் கொள்கை ஒருமைப்பாடு இல்லாவிட்டாலும் ம. பொ. சி.யும் அவர்கள் போல் வான வேடிக்கைகளில் நாட்டம் கொண்டுள்ளார் என்றுதான் கூற வேண்டியிருக்கிறது. செப்டம்பர் முதல் வாரத்தில் முதலமைச்சர் செல்லுமிடங்களிலெல்லாம் கருப்புக் கொடி காட்டப்போவதாக தமிழரசுக் கழகம் திட்டமிட்டிருக்கிறது. இந்த போராட்டத்திற்குக் காரணம் பொறி இயல் கல்லூரிகள் உள்பட எல்லா கல்வி நிலையங்களிலும் தமிழ் போதனு மொழியாக வேண்டும், நிதிஸ்தலங்களிலும் தமிழ் வழக்கு மொழியாயிருக்க வேண்டும் என்பதை ஆட்சியினரிடம் வற்புறுத்துவதற்கு. தமிழ் போதனு மொழியாயிருந்த கல்லூரிகளில் அதை ஏற்று மாணவர்கள் இந்த ஆண்டு சேரவேயில்லை.

மேலும் பொறி இயல் பகுதியில் தமிழை போதனு மொழியாகக் கொண்டால் அம்மொழியில் பாடபுத்தகங்கள் கிடையாது. இதையெல்லாம் ஆராய்ந்து பாராமல் பிற கட்சிகள் ஆர்ப்பாட்டம் செய்கின்றனவே என்று தமிழரசு கழகமும் முரசு கொட்டினுல் அது கேலிக் கூத்தாகத்தான் முடியும்.

⁂ ⁂

லஞ்சப்புகார்கள் பற்றி வரும் கடிதங்களில் 80 சதவிகிதம் மொட்டைக் கடிதங்களாக இருக்கின்றன என காங்கிரஸ் அதிபர் காமராஜர் கூறியுள்ளார். மேலும் அவர்கள் கூறியுள்ளபடி இந்தக் குறைக்கு ஆட்சியினரை மட்டும் குறை கூறுவது தவறு. மக்கள் லஞ்சம் கொடுத்து காரியம் சாதித்துக் கொள்வதை நிறுத்தினுல் இந்தப் புகாருக்குக் காரணமே இருக்காது.

மைசூர் ராஜ்யத்தில் சில காங்கிரஸ் சட்டமன்ற உறுப்பினர்கள் முதலமைச்சர் மீதும் ஊழல் புகார் செய்துள்ளனர். அப்புகார்களில் ஒன்று அந்த ராஜ்ய ரெவின்யூ மந்திரி திருவனந்தபுரத்தில் நடந்த தெற்கு மாநில அமைச்சர் கூட்டத்திற்குச் செல்லாமலே பிரயாணப்படி வாங்கினர் என்பது. இதைப் பற்றிக் குறிப்பிட்ட முதலமைச்சர் திரு. நிஜலிங்கப்பா அந்த மந்திரி திருவநந்தபுரம் சென்றிருந்தார் எனக் குறிப்பிட்டார். சட்ட மன்ற உறுப்பினர்கள் பொய்ப் புகார்கள் செய்தால் சாமான்ய மக்கள் மொட்டைக் கடிதம் எழுதக் கேட்பானேன்?

## நாவல்

தொடர்ந்து எழுதப்படும் நீண்ட கதைகளை 'நாவல்' என்ற பெயரிட்டுக் கூறுகிருேம். 'நாவல்' என்றுல் என்ன பொருள்? தொடர் கதை, நவீனம் என்றுதானே அர்த்தம்.

நாவல் என்பது தமிழ் மொழியைச் சேர்ந்த சொல் அல்ல, ஆங்கிலத்தைச் சேர்ந்த சொல் என்று பலர் கூறுகின்றனர். ஆனுல் அதுவும் சரியல்ல. அவ்வாருயின் 'நாவல்' என்ற இந்தச் சொல் எந்த மொழிக்குச் சொந்தமானது? இத்தாலிய மொழிக்கு உரிய சொல்லாகும் இது. அந்த மொழியில் நாவல் என்றுல் கதை என்று பொருள். எனவே நாவல் என்ற இந்தச் சொல் இத்தாலிய மொழியிலிருந்து ஆங்கிலத்திற்குப் போய், இன்று தமிழுக்குமுரிய ஒரு சொல்லாகி விட்டது.

நமது பண்டை இலக்கியங்களில் நாவல் என்ற சொல் இடம் பெற்றுள்ளது. ஆனுல் அதற்குப் பொருள் வேறு. 'நாவலோ, நாவல்! நாவலோ நாவல்!' என்று கூறுவது அக்காலத்தில் வெற்றிப் பிரதாபத்தைக் குறிக்கும் ஒரு பாராட்டு மொழியாக இருந்தது.

—பாமா ராஜகோபால், ஏழநாடு

# ஆயிரம் ஆண்டு ஆனலும் அன்னை அன்பு மாறிடுமோ ?

— வித்வான் வி. துரைசாமி

★

பொன்கொழிக்கும் பூமியென்றும்,
இன்பசொர்க்க லோகமென்றும்,
அன்னமொடு சொன்னமெலாம்
அமுதாய் விளையுதென்றும்
சொன்னவர்கள் சொல்லையெலாம்
நம்பிச் சுகந்தேடி
ஆழக் கடல்தாண்டி
அப்பாலோர் மண்ணதிலே
வாழ்வைத் தொடங்கி
வகைமோசம் போனஎங்கள்
பொன்னுன பாரதத்துப்
புத்திரரே ! இன்றுங்கள்
அன்னைத் திருநாட்டின்
அடியிணையில் வந்திறைஞ்சிக்
கண்ணீர் பெருக்கிக்
கதறி யழுகின்ற
விண்ணிடிக்கும் ஓசையினுல்
வெந்துமனம் சாம்புகிறேம் !
போன இடந்தனிலே
பொன்னுங் கொழித்ததுண்டோ ?
வானகத்துப் புத்தமுதம்
வாரிப் புசித்ததுண்டோ ?
கொட்டும் வியர்வையினைக்
கொண்டு கணக்கிட்டுக்
கூலி கொடுத்தார்கள் !
கொடுமை கொடுமையம்மா !
பேச்சும் புரியாமல்
பேயறைந்த மாதிரியில்
ஏச்சுமொழிக் கெல்லாம்
இதயம் பொறுக்கும்வண்ணம்
பண்படுத்திப் பல்காலம்
வாழ்ந்தீர் ! பரிதாபம் !
கலகத்துக் காரருக்கும்
கள்வருக்கும் குறைவில்லை !
பால்மணக்கும் பிள்ளையினைப்
பற்றிக் கடத்துவதும்
நாலுலட்சம் தந்தால்
நமன்வா யிருந்துபிள்ளை
தப்புவதும் அந்நாட்டில்
தப்பாமல் தான்நடக்கும் !
இத்தனையும் தாங்கி
இதுகாறும் வாழ்ந்தவுங்கள்
சித்தம் கலங்கிவிடச்
செய்தார்கள் பாவிகள் தாம் !
ஆட்டுமந்தை போல
அடித்து வெளித்துரத்தப்
போட்டதனைப் போட்டபடி
போட்டுப் புறப்பட்டீர் !
நெஞ்சம் வெடிக்கிறது !
நெடுங்கண்ணீர் பாய்கிறது !
கொஞ்சமும் ஈவிரக்கம்
இல்லாக் கொடுங்கோலர்
ஓட விரட்டிவிட்டார்
ஓடுதற்கும் ஓர்வசதி
தேடித் தராமல்
தெருவிலே நிற்கவைத்தார் !
பச்சைக் குழந்தைகளும்
பாவையரும் போக்கின்றி
நச்சுக் குளிரினிலும்
நடுங்கவைக்கும் காற்றினிலும்
பலநாள் கிடந்து
பதைத்துத் துடிதுடித்து
வந்திங்கு சேர்ந்த
வகையை நினைக்கையிலே
எங்கள் இதயம்
இருநூறு சுக்காகும் !
பொங்கும் துயரமுடன்
போந்த சகோதரரே !
கண்ணீரும் கம்பலையும்
கொண்டு கடல்கடந்து
புண்ணுன நெஞ்சமுடன்
போந்து தமிழகத்தின்
திருவடியைப் பற்றிவிட்டீர் !
தீர்ந்ததுங்கள் துன்பமெலாம் !
ஆயிரம்ஆண் டானுலும்
அன்னையன்பு மாறிடுமோ ?

## சுதந்திர தின விழா

பிரதம மந்திரி டில்லி, செங்கோட்டையில் தேசீயக் கொடியை ஏற்றி வைக்கும் நிகழ்ச்சியானது தலைநகரில் நடைபெறும் சுதந்திர தினக் கொண்டாட்ட நிகழ்ச்சிகளில் முக்கிய அம்சமாக விளங்கும்.

அதையடுத்துப் பிரதம மந்திரி உரை நிகழ்த்துவார்; பின்னர் தேசீய கீதம் இசைக்கப்படும். அதற்கு முன்பு பாதுகாப்புப் படையினரும் போலீஸ் படையினரும் மரியாதை அணிவகுப்பு ஒன்று நடத்துவார்கள்.

அன்று மாலை, புது டில்லி, ராஷ்டிரபதி பவனில் வரவேற்பு நிகழ்ச்சி ஒன்று நடைபெறும்.

ஆகஸ்ட் 15-ந் தேதியானது இந்நாடெங்கிலும் விடுமுறை நாளாக இருக்கும்.

ராஜ்ய சர்க்கார்களும் யூனியன் நிர்வாகப் பிரதேசங்களும் சுதந்திர தினத்தை யொட்டிக் கல்லூரிகளிலும் பள்ளிக்கூடங்களிலும் சிறப்பு நிகழ்ச்சிகளை நடத்த ஏற்பாடுகள் செய்துவருகின்றனர்.

[1-ம் பக்கத் தொடர்ச்சி]

இன்னமும் பணபலமும் சாதி வெறியுமே நமது ஜனநாயகத்தைக் காப்பாற்றும் பாவனை காட்டி வருகின்றன. அஸ்திவாரமில்லாத கட்டிடம் போல், புனிதமும் தூய்மையும் இல்லாத அடிப்படையில் மேலும் மேலும் நமது தேசீய வாழ்வின் மேன்மாடங்களை அமைத்துக் கொண்டு போவது கூடாது. என்றே ஒரு நாள் அது சரிந்துவிடும் அபாயம் இருக்கிறது. எனவே புது வாழ்வில் நிலை காண விரும்பும் நமது நாடு தனது பிள்ளைப் பிராயத்திலேயே அடிப்படையை வலுப்படுத்திக் கொண்டாக வேண்டும். அதற்கு வழி காட்ட வேண்டுமென்று இந்த மண்ணின் புனித மகனுக விளங்கும் காமராஜரின் தலைமையை நாடு நம்பிக் காத்திருக்கிறது.

---

இவ்வருடம், டில்லியில் முறையான ராணுவ அணிவகுப்பு எதுவும் நடைபெருது. ஆனல் ராஜ்ய சர்க்கார்களும் யூனியன் நிர்வாகப் பிரதேசங்களும் சாத்தியமான இடங்களிலெல்லாம் அணிவகுப்புகளை நடத்த ஏற்பாடு செய்து கொள்ளலாம். ❋



# செய்திக் கோவை

## கிழங்குச் சீவல் செய்ய புதுக் கருவி

உருளைக்கிழங்கை சீவல் போல் வெட்டுவதற்கும், சீவலை வறுப்பதற்கு முன்னர் உலர வைப்பதற்கும் பயன்படக்கூடிய புதுமையான கருவியை ஹாலந்திலுள்ள இயந்திரத் தயாரிப்பு ஸ்தாபனம் ஒன்று தயாரித்திருக்கிறது.

இந்த இயந்திரத்திலுள்ள வட்டத் தட்டில் கிழங்கை வைத்தால், கிழங்கு வட்ட வடிவமான சீவல்களாகச் சீவப்படுகிறது. பிறகு, தனியாக உள்ள உருளை வடிவப் பாத்திரத்தை இயந்திரத்தில் மாட்டி அதில் சீவலைப் போட்டு உலர்த்தலாம். வறுப்பதற்கு முன்னர் சீவலை உலர்த்துவதால், வறுக்க வேண்டிய நேரம் குறைகிறது. எண்ணெய் செலவு குறைவு; வறுக்கும் போது வாசனை வராது. வறுத்த சீவல் வெண்ணிறமாக இருக்கும்.

இந்த எந்திரத்தின் மூலம் 11 இராத்தல் உருளைக் கிழங்கை 15 விநாடிகளில் சீவலாக வெட்டிவிடலாம். வீடுகளிலும் உணவு விடுதிகளிலும் இந்த இயந்திரம் அதிக அளவில் பயன்படுகிறது.

## பூந்தொட்டி தயாரிக்கப் புது இயந்திரம்

செடி, கொடிகள் வளர்ப்பதற்கான பூந்தொட்டிகள் தயாரிப்பதற்கான புது வகை இயந்திரம் ஒன்றை ஹாலந்திலுள்ள ஒரு நிறுவனம் தயாரித்திருக்கிறது. இந்த இயந்திரத்தின் மூலம் நமக்குத் தேவையான அளவிலும் உருவத்திலும் பூந்தொட்டிகளைத் தயாரிக்கலாம். எந்திரத்தின் ஒரு முனையில் பூந்தொட்டியின் வார்ப்பு ஒன்று இருக்கிறது.

அதனுடன் இணைந்த நீண்ட "கண்வேயர் பெல்ட்"டின் மறு நுனியில் மண்கலவை போடப்படுகிறது. இயந்திரம் இயங்கும் போது, மண்கலவை 'பெல்ட்' மூலம் அச்சுக் குழிக்குச் சென்று அங்கு பூந்தொட்டியாக உருமாறி வெளிவருகிறது. இந்தத் தொட்டிகளை வரிசைக்கு அடுக்குவதற்கான சாதனமும் இயந்திரத்திலேயே உள்ளது.

இந்த இயந்திரத்தின் மூலம் துரிதமாகவும், வலுவாகவும் பூந்தொட்டிகளைத் தயார் செய்ய முடிகிறது. இதனுல், உடல் உழைப்பு குறைகிறது. செலவும் அதிகமாவதில்லை. நெதர்லாண்ட்ஸில் பூந்தோட்டங்களுக்கான தொட்டிகள் இப்போது இந்த இயந்திரத்தின் மூலம் தயாரிக்கப்படுகின்றன.

## முட்டையின் ஓடு நீக்கும் சாதனம்

முட்டையிலிருந்து ஓட்டையும், வெண்கருவையும், மஞ்சள் கருவையும் தனித்தனியே பிரித்தெடுக்கும் சாதனம் ஒன்று நெதர்லாண்ட்ஸில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இந்தக் கருவியின் மூலம் ஒரே சமயத்தில் 360 முட்டைகளைக் கையாளலாம். இந்த இயந்திரம் ஓட்டல்காரர்களுக்கும், மற்றும் சிறு அளவில் முட்டைகளைப் பயன்படுத்துபவர்களுக்கும் மிகவும் உபயோகமாக இருக்கிறது.

ஒரே சமயத்தில் 75 முட்டைகளைக் கையாளக் கூடிய இயந்திரமும் தயாரிக்கப்பட்டிருக்கிறது. இந்த இயந்திரங்களுக்கு இப்போது அதிகக் கிராக்கி இருந்து வருகிறது.

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

பிரபு இப்போது வாலைச் சுருட்டிக் கொள்ள வேண்டியதாயிற்று.

ஏழை எளிய விவசாயப் பெருமக்களுக்கு இனி எவரும் அநீதி விளைத்திட முடியாது. காங்கிரசாட்சியில் நிறைவேற்றப்பட்ட -

ஜமீந்தாரி ஒழிப்புச் சட்டம்.

உழவர் கடன் நிவாரணச் சட்டம்.

பண்ணையாள் பாதுகாப்பு அவசரச் சட்டம்.

சென்னை ராஜ்ய சாகுபடியாளர் நியாயவாரச் சட்டம்.

நில உச்சவரம்பு மசோதா

போன்றவை விவசாயப் பெருமக்களின் கேடயங்களாக விளங்குகின்றன. இனி அவர்களை ஏமாற்றிடவோ, சுரண்டிடவோ எவராலும் முடியாது என்ற நிலையைக் காங்கிரசாட்சி உண்டாக்கியிருக்கிறது.

சிறு விவசாயி தானே என்று கிள்ளுக் கீரையாகக் கருதியகாலம் மலையேறி விட்டது. அவருடைய உரிமையில் கை வைத்தால் அவருக்குப் பாதுகாப்பு, சுப்ரீம் கோர்ட் வரை எல்லாக் கட்டங்களிலும் உண்டு.

சுதந்திரத்திற்கு முன்பு, சிறு நிலங்களை வைத்துக் கொண்டிருந்தவர்கள் பட்ட தொல்லைகளை மேலே விரித்தேன் அல்லவா. இன்று அவையெல்லாம் பழங் கதைகள்.

இன்றைய விவசாயிகளுக்கு மாடு வாங்கக் காங்கிரசாட்சி பணம் தருகிறது. கால்நடை வளம் பெருக வழிவகுத்திருக்கிறது. புதிய விவசாயக் கருவிகளை, புதுமையான செழிப்பு கொழித்திடச் செய்யும் உரங்களை வழங்குகிறது.

இன்றைய விவசாயி கடனுக்காகப் பெரிய பண்ணையாரிடம் பல்லிளித்து நிற்க வேண்டாம். கூட்டுறவு அமைப்புகள் சுலப விகிதங்களில் கடன் தருகின்றன.

விளைச்சலைப் பணமாக்குவது பற்றியும் திண்டாட வேண்டாம். மார்க்கெட் வசதிகள் பெருகியுள்ளன. விவசாயி நஷ்டமடையத் தேவையில்லை. கூட்டுறவுத் துறை 'என் கடன் உழவர்க்குப் பணி செய்து கிடப்பதே' என்ற அறிவிப்புடன் செயல்படுகிறது!

இவ்வாறு, ஜமீந்தார் - பெருநிலக்கிழார் ஆதிக்கம் அழிந்துபோய் விவசாயி நிம்மதியாக வாழக் காங்கிரசாட்சி பெரும் புரட்சிகரமான திட்டங்களை நிறைவேற்றியிருக்கிறது.

இன்றைய தினம் பாராளுமன்ற விவாதத்திலுள்ள அரசியல் சட்டம் 17-வது திருத்தம் நிறைவேறப் போகிறது பார்த்துக் கொண்டேயிருங்கள். அத்துடன் மிட்டா மிராசுகளின் கொட்டமும் பூரணமாக முடிவடைந்து விடும்.

சுதந்திரத்திற்குப் பின்னர் வேறு பல முக்கியமான துறைகளிலும் காங்கிரசாட்சி புரட்சிகரமான நடவடிக்கைகளை எடுத்திருக்கிறது.

முன்பெல்லாம் ஊருக்கு இரண்டொரு கிராமபோன் பெட்டிகள் இருக்கும். ஓட்டல்களிலேகூடத் தேய்ந்து போன இசைத்தட்டுகளின் ஒலியைத்தான் அந்தக் காலத்தில் விருப்பத்தோடு கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

இன்று வானொலிப்பெட்டி நடுத்தர வர்க்கத்தினரின் அத்தியாவசிய வாழ்க்கை அம்சங்களிலே ஒன்ருகி விட்டது. (கிராமபோனைச் சீந்துவார் இல்லை!)

மேஜை மின்சார விசிறிகளும், கூரை மின் விசிறிகளும் சொந்த வீடு இல்லாதவர்களாலும் தாராளமாக உபயோகிக்கப்படுகின்றன.

அன்றையதினம் கிராமங்களில் இரவு வேளைகளில் இருள் ஆட்சி செலுத்தும். மண்ணெண்ணெய் லாந்தர் சில இடங்களில் மங்கலாக எரிந்து கொண்டிருக்கும்.

இன்று மின்சார விளக்குகள் வரிசை வரிசையாகக் காட்சி தருகின்றன. சின்னஞ்சிறு கிராமங்களிலும், அதுவும் தமிழகத்தைப் பொறுத்த வரையில் மின்சாரத்தின் பயனைத் துய்க்காதவர்களே இல்லை எனலாம். வீடுகளில் ஒளி, வானொலிப் பெட்டி முதலியவை என்ருல் வயல் வெளிகளில் நீரிறைக்கும் பம்பு செட்டுகள் மின்சார உதவியுடன் இயங்குகின்றன.

மின்சாரம், பணக்காரர்களுடைய ஏகபோக உரிமைப் பண்டமல்ல. சாமானிய மக்களின் அன்ருட வாழ்க்கையின் அம்சங்களில் ஒன்று என்பதே இன்றைய புரட்சிகரமான நிலை.

நோய்களிடத்தில் கொண்டிருந்த அச்சம் அவற்றைத் தெய்வங்களாகவும் எண்ண வைத்தது நம் மூதாதையர்களை. அம்மையா, காலராவா பிளேக்கா எந்தப் பெரு நோய்க்கும் மருந்து கிடையாது முன்பு. கடவுள் விட்ட வழி என்றிருப்பார்கள்; தெய்வ அபசாரமோ என்று நடுங்கித் துடிப்பார்கள். ஆடு வெட்டிப் பார்ப்போம் மாரியாத்தாளுக்கு, கோழி வெட்டிப் படைப்போம் குலதெய்வத்துக்கு என்றெல்லாம் முயற்சிப்பார்கள்.

பணக்காரர் வீட்டில் வியாதி வந்தால் 'இராஜ வைத்தியம்' நடைபெறும். மாவட்டத் தலைநகருக்கோ அல்லது சென்னைக்கோ கொண்டு சென்று விசேட மருத்துவர் மூலம் கவனிப்பார்கள். மருந்துகளும், டாக்டர்களும் அங்குதானே கிடைக்கக்கூடும்! ஏழையின் இல்லத்தில் எவருக்கேனும் உடல் நலமில்லையென்ருல் 'விதிவிட்ட வழி' என்று சும்மா இருப்பார்கள். பாட்டிமார்களின் கை வைத்தியத்தைப் பெருமளவும் நம்பிக் கிடப்பர். அருகாமையில் மருத்துவமனைகள் இல்லாத நிலைமையில் வேறு என்ன செய்ய முடியும்?

இன்று பிணி போக்கும் பணி பரவலாக நடைபெறுகிறது. மருத்துவ மனைகள் ஆயிரமாயிரமாகக் கட்டப்பட்டுள்ளன. காலரா வந்தது, இத்தனை பேர்கள் செத்தார்கள், அம்மை நோய் கண்டது, ஆயிரம் பேர்கள் மாண்டார்கள் என்ற ஆண்டுப் பட்டியல் இப்போது வருவது இல்லை!

சுகாதாரத் துறையில் ஏற்பட்டுள்ள அபிவிருத்தியின் காரணமாக 1940-49-ல் 32 ஆக இருந்தது சராசரி வயது இப்போது 47.5 ஆக உயர்ந்திருக்கிறது.

மாளிகை வாசிகளுக்குத்தான் — பணபலமிக்கோருக்குத்தான் - மருத்துவ வசதிகளும் சுகாதார வாழ்க்கையும் சாத்தியம் என்றிருந்த நிலையை மாற்றிச் சாதாரண மக்களுக்கும் அவற்றை எட்டச் செய்வதன் மூலம் மாபெரும் புரட்சியைச் செய்துள்ளது காங்கிரசாட்சி.

சொந்தமாக வீடு, முன்பு பலருக்குக் கிடையாது. "நமக்கு வருகின்ற வருவாயில் சொந்த வீடு எங்கிருந்து ஐயா கட்டிக்கொள்ள முடிகிறது? வாழ்க்கையின் அத்தியாவசியச் செலவுகளுக்கே பணம் போதவில்லை. கடன் வாங்கிச் சமாளிக்க வேண்டியிருக்கிறது. சொந்தமாக வீடு கட்டுவது என்பதை நம்மைப் போன்றவர்கள் கனவில் கூட எண்ணிப் பார்க்க இயலாது" என்பார்கள். உண்மை நிலையும் அதுவாகவே இருந்தது.

காங்கிரசாட்சி கனவில் கூட எண்ணிப்பார்க்க இயலாது என்று கருதப்பட்டதை நனவாக்கியிருக்கிறது. குறைந்த வருமானமுள்ளவர்கள் வீடு கட்டிக்கொள்ள ஆட்சியாளர் பண உதவி செய்கிருர்கள். நவீன வசதிகளுடன் கூடிய வீடுகளையும் கட்டித் தருகிருர்கள். வீடு கட்டும் கூட்டுறவுச் சங்கங்களுக்குக் கடன் வசதி அளிக்கிருர்கள்.

'நம் வீடு இது' என்ற பெருமித உணர்ச்சியுடன் குடியேறிய பின்னர், மாதாமாதம் வாடகை செலுத்துவது போலச் சிறிய தொகை கட்டிக் கடனை அடைக்க முடிகிறது. இவ்வாறு நாடு பூராவும் பல இலட்சக்கணக்கான வீடுகள் உருவாகியுள்ளன.

ஆக, நாடு விடுதலை பெற்றுக் காங்கிரசாட்சி மலர்ந்த பிறகு கடந்த காலத்தில் ஒரு சிலருக்கே உரியனவாகவிருந்த வாழ்க்கை வசதிகள் அனைத்தும் ஏழை-எளிய மக்களுக்குக் கிடைக்கத் தொடங்கி விட்டன.

இந்த உண்மையைத் தெளிவாக உணர்ந்து கொண்டால் காங்கிரஸ் ஏழைகளின் நண்பன் என்பது புரியும்.

காங்கிரஸ் ஏழை - எளிய மக்களின் கேடயமாக விளங்குவதால் பெருமுதலாளிக் கூட்டம் காங்கிரசாட்சியை ஒழிக்க முயற்சிக்கிறது.

'ஏழைகளுக்குக் காங்கிரஸ் தொண்டாற்றுகிறது ஆகவே, அது ஒழிய வேண்டும்' என்று முதலாளிகளின் கட்சி வெளிப்படையாகச் சொல்லுவதில்லை. சொன்ருல் அந்த வாதம் எடுபடாது என்று அதற்குத் தெரியும்.

இராவணன் மாரீசனை அனுப்பியதுபோல மக்களை மயக்கக்கூடிய காரணங்களைக்கூறி 'காங்கிரசை அழித்திட வாரீர்' என்கிறது.

காங்கிரசை எதிர்த்திட தானே நேரில் செல்லுவதை விட வேறு கட்சிகளையும் அமைப்புகளையும் பயன்படுத்துவது நல்லது என்று உணர்ந்துள்ள முதலாளிகளின் முகாம் தி. மு. க., முஸ்லீம் லீக், ஜனசங்கம் போன்றவற்றைத் தன் எடுபிடிகளாகப் பயன்படுத்துகிறது.

இந்தக் கட்சிகள் காங்கிரசை எதிர்க்கின்றன என்ருல் அவற்றின் பின்னே ஊக்குவிக்கும் சக்தியாக இருப்பது முதலாளிகளின் கூட்டம் என்பதை ஏழை - எளிய மக்கள் புரிந்து கொள்ள வேண்டும்.

இந்த வகையில் நாட்டிலுள்ள சாதாரண மக்கள் எடுக்க வேண்டிய முடிவு தெளிவானது.

காங்கிரஸ் அவர்களுக்காகப் பணியாற்றுகிறது. எனவே காங்கிரசை ஆதரிப்பது அவர்களது கடமை; அவர்களது நலன்களுக்கு அதுவே உகந்த செயல்.

காங்கிரஸ் அழிந்தால் அதன் இடத்தை நிரப்பிட - ஏழைகளின் சார்பிலே ஆட்சி நடத்த - இன்றைய இந்தியாவில் வேறெந்தக் கட்சியும் கிடையாது.

மிக முக்கியமான இந்த உண்மையை மக்களனைவரும் உணர்ந்திட வேண்டும்.

பாட்டாளி மக்களே! உழவப் பெருமக்களே! எளிய அலுவலர்களே! காங்கிரஸ் நமது பாதுகாவலன். அதன் இலட்சியமாகிய ஜனநாயக சோஷலிசம் நமது வாழ்வில் தோன்றவிருக்கும் விடிவெள்ளி!

பொருளாதார மேடு பள்ளங்கள் இன்னும் பூரணமாக அகலவில்லை. சமுதாயத்திலுள்ள சுரண்டல் கொடுமைகள் முழுமையாகத் தொலைந்தபாடில்லை.

காங்கிரசாட்சி மக்கள் நல்வாழ்வுக்காகச் செய்திடக் கூடிய அருமையான பணிகளுக்குக் குந்தகம் விளைப்போர் சக்தி மிகுந்தவர்களாக இருக்கிருர்கள்.

இந்த நிலையில் வாழத் துடிக்கும் மக்களாகிய நாம் காங்கிரசின் பின்னே அணிவகுத்து நிற்போமாக.

நீண்ட நாளைக்கு இன்றைய பொருளாதாரச் சுரண்டல்கள் தொடர்ந்து நடைபெற முடியாது. உழைப்பவன் ஒருவன் உண்டுகளிப்பவன் மற்ருெருவன் என்ற கதை இனி நடவாது.

புயலுக்குப் பின் அமைதி ஏற்படுவதைப்போல, இரவுக்குப் பிறகு பகல் தோன்றுவதைப்போல சுரண்டல் சமுதாயம் அழிந்து சமதர்ம சமுதாயம் நிச்சயமாக ஏற்படத்தான் போகிறது.

அந்த இலட்சியம் பூரணமாக நிறைவேறுகின்ற வரையில் காங்கிரஸ், ஏழை எளிய மக்களின் பாதுகாவலனுகத் தொடர்ந்து செயலாற்றிக் கொண்டே இருக்கும்.

★

# நன்முறைகள் 11

நெல்லில் உயர்ந்த மகசூல் வயலிலிருந்து தானுகக் கிடைத்துவிடக்கூடியதல்ல. உழைப்பால்தான் உயர்ந்த மகசூல் கிட்டும். ஆனால் விஞ்ஞான முறைகளைக் கைப்பற்றினால் விவசாயத்தில் உள்ள உழைப்பில் சிரமத்தையும், செலவையும் ஒரு அளவுக்கு குறைத்துக் கொண்டு சாதாரணமாக கிடைக்கும் மகசூலைப் போல் இரண்டு மூன்று பங்கு அதிகம் பெறலாம் என்பது கண்கூடாகப் பல விவசாயிகள் கண்டறிந்த உண்மை.

உயர்ந்த விவசாய முறைகள் நெற்பயிரைப் பற்றிய வரை யாவை என்பதை விவசாயிகளுக்கு இங்கு நினைவூட்டுகிறோம்.

1. விதையைப் பொருத்தே விளைச்சல் என்பது நினைவில் இருக்கவேண்டும் விவசாய இலாகாவால், பிராந்தியங்களுக்கு ஏற்றவையும், நிரம்ப மகசூல் தரக்கூடியவையும், பல நோய்களை எதிர்த்து நிற்கக் கூடியவையுமான அபிவிருத்தியான விதைகள் உருவாக்கப்பட்டுள்ளன. விவசாய அதிகாரிகளைக் கலந்தாலோசித்து பட்டத்துக்கும், நிலத்துக்கும் ஏற்ற விதையைப் பொறுக்கிக் கொள்ளவேண்டும்.

2. உப்புக் கரைசல் (3 சதவிகிதம்) தயாரித்து விதைகளை இதில் போட்டு கரைசலில் அமுங்கும் விதைகளை விதைக்கப் பொறுக்கிக் கொள்ளவேண்டும்.

3. விதையோடு ஒட்டி வரும் நோய்கள் நாற்றையும் பயிரையும் பாழடிக்கும் இதைத் தவிர்க்க விதைக்கு கர்ம-பாதரச மருந்து கலந்தே விதையுங்கள். இதனால் தூர அழுகல் நோய் போன்றவைகளைத் தடுக்கலாம். மருந்தின் விலை அதிகமில்லை.

4. நாற்றங்காலில் அதிக நெருக்கமின்றி விதையுங்கள். நாற்றுகள் விறுவிறுப்பாகவும் புஷ்டியாகவும் வளரும்.

5. உயரமான நாலடி அகலமும் சௌகர்யமான நீளமுள்ளதுமான நாற்றங்கால் பாத்திகளில் விதைக்கவும்.

6. காலத்தில் நடவு செய்யுங்கள். வரிசை நடவுதான் மேலானது. குறுவையானால் துவாரம் ஒன்றுக்கு இரண்டு மூன்று செடிகளுக்கு மேல் வைக்காதீர்கள். துவாரத்துக்கு துவாரம் 4 அங்குலம் இடைவெளி விடவும், வரிசைக்கு வரிசை 10 அங்குலம் இடைவெளி வேண்டும் நடுக்கால பயிர், நீண்ட காலப் பயிரானால் துவாரத்துக்கு இரண்டு செடிகள் வைத்து, துவாரத்துக்கு துவாரம் 6 அங்குலம் விட்டு வரிசைக்கு வரிசை 10 அங்குலம் விடவும். இதனால் ரோடரி களையெடுப்பானைச் செலுத்திக் களை யெடுப்பது எளிது, செடிகள் புஷ்டியாக வளரும்.

7. கணக்காக உரமிடுங்கள். நிலச் சோதனை செய்து விவசாய இலாகா மூலம் எந்த விதமான உரத்தை என்ன அளவுக்குப் போட வேண்டும் உங்கள் நிலத்துக்கு என்று கேட்டறிந்து போடுங்கள். மண் சோதனை இலவசமாகச்செய்யப்படுகிறது. நைட்ரஜன் கொண்ட உரங்களை இரண்டு தடவைகளில் இட வேண்டும். சூப்பர் பாஸ்பேட்டை நடவு செய்யும் போது போடவும். 150 ராத்தல் அமோனியம் ஸல்பேட் (நைட்ரஜன் உரம்) இட வேண்டுமானால், இந்த அளவில் பாதியை நடவு செய்யும்போது வயலில் போடுங்கள். பாக்கிப் பாதியை நடவு செய்த 30 லிருந்து 45 நாட்களுக்குள்ளும் போடவும்.

8. கவனமாகப் பாசனம் செய்யவும். வயலை வெள்ள மடிக்காமலும், வரள விடாமலும் பாசனம் செய்ய வேண்டும். வள்ளமாக பாச்சினால் தண்ணீர் வீணுகும். மேலும், உரங்கள் அடித்துக்கொண்டு போகப்பட்டு பயிர் உரத்தின்பலனை அடையாது.

9. அடிக்கடி களையெடுங்கள். ரோடரி களையெடுப்பானைப் பயன்படுத்துங்கள். இதனால் ஆள் கூலியும் சரமமும் மிச்சப்படும்.

10. நோய் பூச்சிகள் வரமால் பயிரைக் காப்பாற்றுங்கள். வருமுன் காப்பு செய்வதே மேல். பூச்சி வருமுன்னே மருந்து போட்டுவிடுங்கள். என்டிரினும் தாமிர பூஞ்சாணக் கொல்லியும் கலந்த மருந்தை தெளிப்பான் மூலம் தெளியுங்கள்.

11. வயல் தயாரிப்பின் போது தொழு எருவையோ கம்போஸ்டையோ, நகர எருவையோ, பசுந்தாள் உரத்தையோ வயலில் உழுது கலக்க மறக்க வேணடாம்.

சுருங்கச் சொன்னால் நல்ல விதை தேர்ந்து, உப்பு நீரில் இட்டு மிகக நல்ல விதை பொறுக்கி, மருந்து கலந்து, மேட்டுப் பாத்தியில விசாலமாக நாற்று வளர்த்து, வரிசை நடவுசெய்து, களையெடுத்து உரமிட்டு ஊட்டமிட்டு, கணக்காய் நீர் வார்த்து நோய் தடுத்தால் நெல் ஓங்கும், நாடும் ஓங்கும்! ◆



வரிசை நடவு செய்து உரம் தூவி நெற்பயிரைப் பேணுகிறார் விவசாயி.

அறிவிப்பு 2.

## மேட்டூர் தண்ணீர்

கடந்த சில வருஷங்களாக கீழ் பவானி நீர்த்தேக்கத்தில் அதிகமான தண்ணீர் இருந்த காரணத்தால் ஆகஸ்ட்டு 15-ம் தேதி முதல் தண்ணீர்சாகுபடிக்கு திறந்து விடுவதற்குப் பதிலாக ஆகஸ்டு முதல் தேதியிலிருந்தே திறந்து விடப்பட்டது. இந்த வருஷம் மேற்படி நீர்த் தேக்கத்தில் தண்ணீர் குறைவாக இருப்பதால் ஆகஸ்டு முதல்தேதி திறந்து விடப்படமாட்டாது. ஆகஸ்டு 15-ம் தேதி திறந்துவிடுவதும் ஜூலை மாத முடிவில் இருக்கும் நிலையைப் பொருத்துதான். ஆகையால் சர்க்காரால் மேற்படி நீர்த் தேக்கத்திலிருந்து எந்த தேதியில் எவ்வளவு ஏக்கரா நிலங்களுக்கு தண்ணீர் விடப்படும் என்பதைப் பற்றிய உத்திரவு வரும் வரையிலும் ரயத்துக்கும் காத்திருக்கும்படி இதனால் தெரிவிக்கப்படுகிறது. ◆

## புகைபோக்கி தேவையில்லை

காற்றை அசுத்தப் படுத்தும் கரிப்புகைப் பிரச்சினையைத் தீர்க்க மேற்கு ஜெர்மன் பொறியியல் நிபுணர் ஒருவர் நூதன வழியைக் கண்டுபிடித்திருக்கிறார். இப்புகையை சாக்கடையில் இழுக்கும்படி வழி செய்திருக்கிறார். இத்திட்டம் காரணமாகப் புகையை ஒழிக்கவும் எதிர் காலத்தில் பொது மக்கள் சிறிது செலவை ஏற்க வேண்டியிருக்கும் என்றும், ஆனால் சுகாதார வசதியைக் குறித்து இச்செலவை மக்கள் பொருட்படுத்த மாட்டார்கள் என்றும் அவர் கூறுகிறார்.

எதிர்காலத்தில் வீடுகளில் புகைக் கூண்டுகளுக்கே அவசியம் இராதோ என்ற நிலைமை சீக்கிரமே ஏற்பட்டால் ஆச்சரியப்படுவதற்கில்லை. காற்றை அசுத்தப் படுத்தும் கரிப்புகையை அகற்ற மேற்கு ஜெர்மன் பொறியியல் நிபுணர் ஆட்டோகோயேலர் ஒரு புது வழியைக் கண்டுபிடித்திருக்கிறார். முக்கியமாகத் தொழில் வளர்ச்சி பெற்றுள்ள பிரதேசங்களில் வசிப்பவர்களுக்கு இது ஒரு வரப்பிரசாதமாகும்.

இப்போது இந்தப் புகைப் பிரச்சினையைத் தீர்க்க புகைக் கூண்டுகளை மிக உயரமாக அமைப்பது என்ற வழிதான் பின்பற்றப்படுகிறது. இதன் மூலம் இப்பிரச்சினை அடியோடு தீர்க்கப்படுவதில்லை. வாயு வடிகட்டிகள் போன்ற முறை அமெரிக்காவில் அனுசரிக்கப்படுகிறது. என்றாலும் அதற்கு மிக அதிகமாகச் செலவாகிறது. பலனும் பூரண வெற்றியைத் தருவதில்லை.

தற்சமயம் கண்டுபிடிக்கப்பட்டுள்ள புது வழியின்படி புகை பூமிக்குள் உறிஞ்சப்பட்டு கரியமில வாயுவாக மாற்றப்பட்டு சாக்கடை நீருடன் கலந்துவிடும். பூமிக்கடியில் அமைக்கப்பட்டுள்ள சாக்கடைகள் மூன்றில் ஒரு பங்குக்குதான் இப்போது உபயோகிக்கப்படுகிறதாம். ஆகவே அதையே தன் திட்டத்திற்கு பயன்படுத்திக் கொள்ளலாம் என்று இவர் தீர்மானித்திருக்கிறார்.

இதே மாதிரி கார்களிலிருந்து கிளம்பும் புகையையும் சாலையில் அமைக்கப்படும் ஜல்லித்துவாரங்களின் வழியாக பூமிக்குள் கிரகிக்கச் செய்ய முடியும் என்று இவர் கூறுகிறார்.

இத்திட்டத்தை கிரஹிக்கும்படி செய்ய பணச்செலவு சிறிது அதிகமாக இருக்கும். விஷ வாயுக்கள் பூமியிலிருந்து இடைவெளிகள் மூலம் வெளிவராமல் செய்ய வேண்டும். இத்திட்டத்திற்கு நல்ல எதிர்காலம் இருப்பதாக அவர் நம்புகிறார். குப்பை அகற்ற செலவழிப்பது போல இந்த ஏற்பாட்டிற்கும் ஒரு சிறிது செலவு செய்ய மக்கள் பின்வாங்க மாட்டார்கள் என்று தான் கருதுவதாக அவர் கூறினார்.

★

தென்கிழக்கு ஆசியாவின்

# அரசியல் பிரச்சனை

இன்று இயங்கும் அமெரிக்க நிர்வாகத்தின் நான்காவது ஆண்டில் தென் கிழக்கு ஆசியாவில் ஒரு நெருக்கடி நிலை உருவெடுத்துள்ளது வியப்பிற்குரியதே. ஃப்ரெஞ்சு இந்தோ – சீனா என்று ஒரு காலத்தில் பெயர் கொண்டிருந்த இந்நாட்டில் 1954ல் கையாண்ட ஜினிவா ஒப்பந்தத்தின் படி பெயரளவில் அமைதி நிறுவியிருந்த போதிலும் உண்மையில் அரசியல் அமைதியற்ற நிலையில் தான் இருந்து வந்தது:

அரசியல் நிலை அமைதியற்றதாக இருந்து வந்ததற்கு வெளிப்படை சின்னங்கள் லாவோஸில் நடு நிலைமையாளர்கள், வலது சாரியார்கள், பாதட் லோவோ கம்யூனிஸ்டுகள் முதலியவர்கள் அடிக்கடி ஈடுபட்ட போர்களாகும். இந்நாட்களாக இத்தகைய ஓர் சூழ்நிலையில் வடக்கிலிருந்து தென் வியட்நாமுக்குள் கொரில்லாக்களின் ஊடுருவல்கள் சதா நிகழ்ந்து கொண்டிருந்ததன் காரணத்தால் இந்நாட்டு நிர்வாகமும் கொஞ்சம் கொஞ்சமாக பலஹீனமடைய நேரிட்டது. ஜனாதிபதி தியமோ அல்லது தளபதி கானோ இந்நிலையைத் தவிர்க்கவும் முடியாமற் போய் விட்டது.

தென் வியட்நாம் அரசியலில் ஏற்பட்டுள்ள இன்றைய நிலைக்கு லாவோஸும் ஒரு வகையில் சம்பந்தப்பட்டுள்ளது. எப்படியெனில் தென்பகுதியில் போரில் பங்கு கொண்டுள்ள கம்யூனிஸ்டுகளுக்கு வடக்கிலிருந்து வரும் பொருளுதவியோ படை உதவியோ லாவோஸ் பிரதேசத்தின் வழியாகத்தான் வரவேண்டி வருகிறது. ஆகையால், இவ்விரண்டு நாடுகளிலும் ஒரே சமயத்தில் அரசியல் நெருக்கடிகள் அடிக்கடி விளைவதில் ஆச்சர்யப்படுவதற்கிடமில்லை.

இவ்வாண்டு ஏப்ரல் 19-ஆம் தேதியன்று லாவோஸின் தலைநகராகிய வியன்டியேனில் அரசியலைக் கவிழ்க்க சதித் திட்டமொன்று தலையெடுத்தது. அச்சதி வலது சாரியார்களால் நடுநிலைமைக் கட்சிப் பிரதமர் இளவரசர் ஸுவன்னா ஃபௌமாவை எதிர்த்து திட்டமிடப்பட்டது. ஆயினும், பிரதமர் கைது செய்யப்பட்ட பொழுது அவருடன் லாவோஸில் முக்கிய அமெரிக்க நண்பர் தளபதி ஃபௌமி நொஸவான் என்பவரும் கைது செய்யப்பட்டார்.

சதி, யூ. எஸ்ஸின் ஆதரவைப் போதிய அளவு பெறாததன் காரணத்தால் தோல்வியுற்றது. பதிலடியாக பாதட் லாவோ கம்யூனிஸ்டுகள் தளபதி காங்லீயின் துருப்புகளை எதிர்த்து வெற்றி பெற்றனர். இச்செயல் லாவோஸில் பல்வேறு கட்சிகளின் சமநிலை சக்தியை கவிழ்த்து விட்டது. அச்சமயத்தில் தளபதி கானின் நிர்வாகம் தென் வியட்நாமில் கொரில்லா படைகளின் வட திசை ஆக்ரமிப்புக்குப் போதிய அளவு எதிர்ப்புக் காட்ட முடியாமல் பலஹீனம் பெற்றுக் காட்சியளித்தது. தவிர மேலண்டை நாடாகிய கம்போடியாவிலும் சிலகாலமாக இந்நாட்டிற்கும் அமெரிக்காவுக்கும் விரோத மனப்பான்மை வளர்ந்து கொண்டிருந்தது வெளிப்படையாகக் கட்சியளித்தது. சீனாவின் தென் திசை விஸ்தரிப்புக்கு பயந்து கம்போடியா நிர்வாகம் தன்னுடைய நடுநிலைமைக் கொள்கையை வலியுறுத்த இவ்விதமான போக்கை கடைப்பிடிக்கிறதென்று ஊகிக்கப்படுகிறது. இவ்விதமான சூழ்நிலை உருவெடுத்து தென் கிழக்கு ஆசியாவிலே அமெரிக்காவின் நிலையைக் கடுமையாக பாதிக்க வித்திட்டுள்ளது. இப்பயங்கர நிலையைப்பற்றி விவாதிப்பதற்குத் தான் கடந்த ஜூன் மாதம் ஹானோலூலூவில் யூ. எஸ். உயர்தர உத்தியோகஸ்தர்களும், இராணுவ அதிகாரிகளும் கூடினார்கள். இதன் முடிவு யாதென்பது இன்னும் அறிவிக்கப்படவில்லை. ஜனாதிபதித் தேர்தல் தினம் நெருங்கி வரும் பொழுது இம்முடிவை யொட்டிய அறிக்கைகளையும் எதிர்பார்ப்பதில் பயனில்லை.

யூ எஸ்ஸும் அதன் ஸியாடோ நேசநாடுகளும் இப்பொழுது இப்பகுதியில் எதிர் நோக்கி நிற்கும் நிலை அவர்களின் இராஜ தந்திர முறைகளினால் ஏற்பட்ட விளைவு என்று ஒரு சாரரார் எண்ணம் கொண்டுள்ளார்கள். லவோஸ் குழப்பத்தினால் பிறநாட்டு இராஜ தந்திர உறவில் ஏற்பட்டுள்ள எதிரொலி பின் வருமாறு:- லாவோஸைப் பற்றி விவாதிக்கக் கூட்டப்பட விருக்கும் 14 நாடுகளின் மாநாட்டை வாபஸ் பெறச் சொல்லி சீனாவின் வலியுறுத்தலும் அதற்கு ஃபிரான்ஸ் ஆதரவளிக்க முன் வந்துள்ளதும், இதற்கு யூ. எஸ்ஸின் எதிர்ப்பு மிகவும் கடுமையாக உருவாகும்.

ஏனெனில் பாதட்லாவோவின் முன்னேற்றத்தை ஒடுக்க மாநாடு பெருத்த அளவு பயன்படும். இத்திக்கில் பிரான்ஸின் புதிய அந்நிய நாட்டு கொள்கை யூ எஸ்ஸின் குறுக்கே நிற்கும். தென் வியட்நாமை முதலிலும், வட வியட்நாமை அடுத்தபடியாகவும், நடுநிலை நாடுகளாகச் செய்து ஹெய்ஃபாங் துறைமுகத்தை அனுபவத்தில் வைத்துக் கொண்டு, ஹெய்ஃபாங் குன்மிங் ரயிலை உபயோகித்து. சீனாவுடன் வியாபாரத்தை வளர்க்க பிரான்ஸ் திட்டமிட்டுக் கொண்டுள்ளது. இத்துறையில் பிரெஞ்சு அதிபர் டீ காலுக்கு ஆலோசனை கூறுபவர் ஜீன் ஸெய்ன்டெனி என்பவர். இவர் வட வியட்நாம் தேசத்தில் சில காலம் தூதராகயிருந்தவர். ஜனாதிபதி ஹோ சி மின்னின் பிரதம நண்பரும் ஆவார். பிரான்ஸின் இத்தகைய அந்நிய நாட்டுக் கொள்கை மாறுதலினால் தென் கிழக்கு ஆசியாவில் அமைதி நிலவும் நாள் அருகாமையிலிருப்பதாகத் தோன்றவில்லை என்று கருதப்படுகிறது.

இப்பொழுது உருவாகியுள்ள சூழ்நிலையில் யூ.எஸ். தென் கிழக்கு ஆசியாவில் மேலும் கம்யூனிஸத்தை எதிர்ப்பதற்குத் தொடர்ந்து ஆதரவு அளித்துக்கொண்டு வருவதா அல்லது இங்கிருந்து விடுவித்துக் கொள்வதா என்ற பிரச்னையை நோக்கி நிற்கிறது. தென் வியட்நாமை வட கம்யூனிஸ்டு நாடு விழுங்கி விட்டால் அத்தகைய நிலை ஸயாமையும், மலேசியாவையும் பீதிக்குள்ளாக்கி இந்நாடுகளை சீனாவுடன் உடன்படிக்கை ஏற்படுத்திக் கொள்ளத் தூண்டுகோலாக உதவும். இத்தகைய ஓர் சூழ்நிலை உருவாகுமே யென்று பயந்து தென் வியட்நாம் பிரதேசத்தின் அந்நிய நாட்டு இலாகா அமைச்சர், 'எங்களது நிர்வாகம் ஆசியாவின் கடைசி போரில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறது' என்று அண்மையில் கூறியுள்ளார்.

எதிர்காலத்தை நோக்கி யூ. எஸ். இராணுவ பலத்தையும் இராஜ தந்திரத்தையும் செவ்வனே கலந்து விரைவில் இப்பிரதேசத்தில் நிரந்தரமாக அமைதி நிறுவ வழி தேடும் என்பதில் ஐயமில்லை.





Edited and Published by its owner Sri. Triloka Sitaram & Printed by him at his Shivaji News printers, 24-A, Theradi Bazaar, Tiruchy-2.
Annual Subscription Including 4 Special numbers Rs. 10. Single copy : Twelve nP, ( Madras office : 12/2 Nallathambi Mudali St., Triplicane, Madras-5,